THE HON. SRI M. A. MANICKAVELU : (a) The Government are aware that the sale of exposed foodstuffs contribute to the spread of intestinal infections.

(b) The provisions of the Madras Public Health Act and the Prevention of Food Adulteration Act are enforced wherever necessary by the public health staff to prevent the sale of exposed foodstuffs.

SRI P. G. MANICKAM : தின் பண்டங்களை விற்பதையும் உணவுப் பொருள்களைக் கலப்படம் செய்து விற்பதையும் தடுக்க சர்க்கார் சட்டமியற்றியிருந்தாலும், கிராமங்களிலும் நகரங்களிலும் பண்டங்கள் சர்வ சாதாரணமாக அவ்வாறு விற்பனை செய்யப்பட்டு வருகின்றன. ஆகவே இதை அறவே தடுப்பதில் ஆங்காங்குள்ள அதிகாரிகளை கவனம் செலுத்தச் செய்யும்பொருட்டு, ஒரு ஸ்பெஷல் உத்தரவை அந்த அதிகாரிகளுக்கு அனுப்ப சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : சில மாதங்களுக்கு முன்பு தான் இதற்காக ஒரு தனி உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறது. அதாவது சென்னை நகரத்தைப் பொறுத்தவரையில் 15–6–1958-ம் தேதியன்று ஒரு உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. அது இது தான். அந்த உத்தரவில், பழங்கள், தித்திப்புத் தின்பண்டங்கள், இட்டிலிகள், தோசைகள், வடைகள், கோவாக்கள், ரசகுல்லாக்கள் முதலியவைகளை ஈ மொய்க்காமல் மூடி வைத்து விற்க வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதை நகரத்தில்தான் எளிதில் அமல் நடத்த முடியும். கிராமங்களில் இதைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தான் அமல் நடத்த முடியும். அங்கே சுகாதாரக் கேடான வியாபாரப் பழக்க வழக்கங்களை திடீரென்று மாற்ற முடியாது. ஆனால் அங்கும் கூடிய வரையில் சுகாதார இலாகா சிப்பந்திகள் இது சம்பந்தமாக எல்லா நடவடிக்கைகளும் எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். சுகாதாரக் கேடான வியாபார குறைகளைப் போக்க வேண்டுமானால் மக்களிடத்தில் அதற்குப் பிரசாரம் செய்ய வேண்டும். அதைச் செய்தால்தான், இத்தகைய பண்டங்களை வாங்கக்கூடாது, இவைகள் உடல் நலனுக்குக் கெடுதி விளைவிக்கக்கூடியவை என்பதை மக்கள் உணருவார்கள். அப்போதுதான் இந்தச் சட்டங்களும் உத்தரவுகளும் வெற்றி அடையும்.

*115 Q.—SRI P. G. MANICKAM : கனம் ரெவினியூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) 1958-ம் வருஷத்திலே கோயமுத்தூர் ஜில்லாவிலே எந்தெந்தத் தாலூக்காக்களிலே காலரா நோய் பரவியது?

(ஆ) எத்தனை பேர்கள் காலராவினால் பீடிக்கப்பட்டார்கள் ?

(இ) இவர்களுள், எத்தனை பேர்கள் இறந்தார்கள் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) Cholera occurred in a mild epidemic form in the taluks of Bhavani, Coimbatore, Dharapuram, Erode, Gobichettipalayam and Udamalpet. Palladam and Pollachi taluks reported sporadic cases.

(b) 730.

(c) 342.

SRI P. G. MANICKAM : கனம் மந்திரி அவர்கள் இப்போது குறிப்பிட்ட தாலூகாக்களில் சில இடங்களில் ஒவ்வொரு வருஷமும் காலரா தோன்றிப் பரவுகிறது. ஆகையால், காலரா தோன்றிப் பரவிவரும் இப்படிப்பட்ட இடங்களை காலரா பரவும் இடங்கள் எனப் பிரகடனப்படுத்த

வதுடன், அங்கெல்லாம் அவ்வப்போது முன் எச்சரிக்கை நடவடிக்கைகள் எடுக்கப்படுவதற்கு வகை செய்யும் உத்தரவு ஒன்றை சர்க்கார் பிறப்பிக்குமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : காலரா பரவுவதற்கு முக்கிய காரணம் நல்ல குடிதண்ணீர் இல்லாததுதான். இப்போது ஆங்காங்கே பாதுகாக்கப்பட்ட நல்ல குடிதண்ணீருக்கு வசதி செய்யப்பட்டு வருகிறது. இருந்தாலும் நல்ல குடிதண்ணீர் இல்லாத சில இடங்களில் இந்த நோய்கள் தோன்றுகின்றன. இவைகள் தோன்றிப் பரவுவது தெரிந்ததும் சுகாதார இலாகாவினர் மக்களுக்கு தடுப்பு ஊசி போடுகிறார்கள். இன்னும், மற்ற நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டுத் தான் வருகின்றன.

*Gramasevaks*

*116 *Q.*—SRI C. MUTHIAH : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) 1957–58-ல் கிராம சேவக் பயிற்சியில் தேறாததனால் எத்தனை பேர் வேலைக்கு எடுத்துக் கொள்ளப்படவில்லை ?

(ஆ) அவர்கள் நிலை என்ன ?

(இ) அவர்கள் உபகாரச் சம்பளம் திரும்ப வசூலிக்கப்படுகிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) 15.

(*b*) They will not be employed as Gramasevaks and they will have to seek someother employment.

(*c*) No, Sir.

SRI C. MUTHIAH : இவர்களில் 1½ வருட காலத்திற்கு மாதம் 45 ரூபாய் ஸ்டைபெண்ட் சர்க்காரிடமிருந்து பெற்றுக்கொண்டு பயிற்சி பெற்ற பிறகு பயிற்சியில் தேறாதவர்களை, அவர்கள் சொந்தப் பணத்திலேயே படிப்பதாயிருந்தால் மீண்டும் ஒரு முறை படிப்பதற்கு அனுமதிக்கலாம். அவ்வாறு படிப்பவர்களில் பரீட்சையில் தேறுபவர்களுக்கு கிராம சேவக் உத்தியோகம் கொடுக்கலாம், தேறாதவர்களுக்கு " ஸ்பின்னிங் ஆர்கனைஸேஷன் " போன்ற ஸ்தாபனங்களில் உத்தியோகங்கள் கொடுக்கலாம். அரசாங்கம் அவ்வாறு செய்யுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அது ஆலோசனை செய்யப்பட வேண்டிய விஷயம். இது சம்பந்தமாக இப்போது ஒன்றும் சொல்வதற்கில்லை.

*Money order forms, post cards and postal orders*

* 117 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Chief Minister be pleased to state with reference to Question No. 439 answered on 28th March 1958—

(*a*) whether the Government are aware that the money order Forms, Post-cards and Postal Orders are still printed only in Hindi and English; and

(*b*) if so, whether the Government propose to make further representation to the Union Government in the matter?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) It has been ascertained from the Postal department that Money Order forms and postal order forms now in use are only in English, but that post cards printed in Hindi have been supplied to Post offices in this State.

(*b*) No, Sir.